# शान्तिपाठाः

# சாந்தி பாடா:

## சாந்தி பாடங்கள்

பத்து சாந்தி பாடங்கள் I வேத மந்திரப் பிரார்த்தனைகள்

மனீஷா பஞ்சகம் I ஏகச்லோகீ I ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம்

தொகுப்பு : ஸ்வாமி குருபரானந்த

**Sanatana Publications**

**No. 142 F, Sabari Sanatana, Greenways Road,**
**Raja Annamalaipuram, Chennai - 600 028**
**Ph. 044 - 2464 16 00 / 94440 37390 / 99405 52516,**
**Email : omsanatana@gmail.com**

| | |
|---|---|
| நூலின் தலைப்பு | : சாந்தி பாடங்கள் |
| தொகுப்பு | : ஸ்வாமி குருபரானந்தர் |
| புத்தக வடிவமைப்பு | : சநாதநா பதிப்பகம், சென்னை |
| அச்சிட்டோர் | : ரத்னா ஆப்செட், சென்னை |

## கிடைக்கும் இடங்கள்

**வித்யா விலாசம்**

16, ட்ரஸ்ட் ஸ்கொயர் தெரு,
ராமலிங்கபுரம், சென்னை - 600 012
e-mail : poornalayam@gmail.com
Website : www.poornalayam.org

**ஸ்ரீ ஸ்வாமி சித்பவானந்த ஆச்ரமம்**

வேதபுரீ, தேனி - 625 531.
போன் : + 91- 4546 253908

**ஸநாதநா பதிப்பகம்**

சபரி ஸநாதநா, எண். 142, முதல் மாடி, கிரீன்வேஸ் ரோடு,
ராஜா அண்ணாமலைபுரம், சென்னை - 600 028.
போன் : + 91- 44 2464 1600

₹ 60/-

# பிரார்த்தனை

(PRAYER)

***உடலாலும் சொல்லாலும் மனதாலும் இறைவனைக் குறித்து நாம் மேற்கொள்ளும் வழிபாடு பிரார்த்தனை ஆகிறது.***

நாம் அனுபவிக்கும் இன்பங்கள் நமக்கு மன உற்சாகத்தையும், நாம் அனுபவிக்கும் துயரங்கள் நமக்கு மன உறுதியையும் கொடுக்க வேண்டும். இத்தகைய அனுபவங்களால் நாம் பண்படுகிறோம். மாறாக, இன்ப அனுபவங்கள் மனதில் கர்வத்தையும், துன்ப அனுபவங்கள் மனதில் சோர்வையும் கொடுத்தால், அத்தகைய அனுபவங்களால் நாம் புண்பட்டுப்போகிறோம், வாழ்க்கையை அழித்துக்கொள்கிறோம்.

நமது வாழ்க்கையை ஆக்கபூர்வமாக மாற்றி, மனதில் உறுதிபெறுவதற்கு நாம் பல சாதனைகளைச் செய்தாக வெண்டும் அவற்றில் பிரார்த்தனை என்பது ஒரு முக்கியமான சாதனை. இறைவனிடம் நாம் விடுக்கும் வேண்டுதல்தான் பிரார்த்தனை அல்லது இறைவழிபாடு ஆகிறது.

நமது இலக்கை அடைய நம்மால் மேற்கொள்ளப்படவேண்டிய முயற்சிகளுக்குப் பதிலாகச் செய்யப்படுவதுதான் பிரார்த்தனை என்ற எண்ணம் தவறு. பிரார்த்தனை என்பது உரிய முயற்சியுடன் சேர்ந்து செய்யப்படவேண்டிய சாதனையாகும். நாம் பல்வேறு வகையான முயற்சிகளை மேற்கொள்கிறோம். பிரார்த்தனை என்பதும் அத்தகைய முயற்சிகளில் ஒன்று.

பலவிதமான சூழ்நிலைகளில் நாம் இறைவழிபாட்டை மேற்கொள்வதுண்டு. அவற்றில் சில :

முதலாவது வகை: ஓர் இலக்கை அடைய முடிவுசெய்து செயலில் இறங்கும்போது நாம் பிரார்த்தனை செய்கிறோம். இத்தகைய பிரார்த்தனை நம் மனதில் உற்சாகத்தையும், இலக்கை அடையும்வரை செயல்படுவதற்கான ஆற்றலையும் கொடுக்கிறது.

ஓர் இலக்குக்காகச் செய்யப்படும் பிரார்த்தனை, அந்த இலக்கையும் அதை அடைவதற்கான செயல்களையும் நமக்கு நினைவுபடுத்திக்

கொண்டிருக்கும். பல சமயங்களில் நாம் இலக்கை மறந்துவிடுவதுண்டு. எனவே, நமக்கு நினைவூட்டல் கருவிகள் தேவைப்படுகின்றன. Prayer is the best form of reminder - பிரார்த்தனை ஓர் உன்னதமான நினைவூட்டல் கருவி.

ஒரு நல்ல காரியத்தைத் தொடங்கும்போது நாம் பிரார்த்தனை செய்வதால் நமது மனம் அமைதி அடைகிறது; இறைவன் நமக்குத் துணை இருக்கிறார் என்ற நம்பிக்கை மலர்கிறது. தோல்வி பற்றிய அச்சம் நீங்குகிறது. ஆகவே, பிரார்த்தனை என்பது அமைதி, நம்பிக்கை, அபயம் ஆகியவற்றைக் கொடுக்கும் கருவியாகவும் அமைகிறது. Prayer confers calmness, faith and courage.

இலக்குகளை நோக்கிய பயணத்தில் அடுத்தடுத்துப் பலவிதமான தடைகள் (obstacles) வருவதை நாம் காண்கிறோம். அத்தகைய தடைகளை நீக்குவதற்கான இன்றியமையாத மார்க்கமாக அமைவது பிரார்த்தனையே.

ஆகவே பிரார்த்தனை என்ற சாதனையானது :

1. உற்சாகம் (encouragement) 2. தொடர்முயற்சி (persistence) 3. நினைவூட்டல் (reminder) 4. அமைதி (calmness) 5. நம்பிக்கை (faith) 6. பயமின்மை (fearlessness) 7. தடைகளை நீக்குதல் (obstacle removal) போன்ற பல உன்னதமான பலன்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

இரண்டாவது வகை: இறையருளால் நாம் இலக்கை அடைந்தபின் இறைவனுக்கு நன்றி சொல்லும்விதத்தில் இறைவனை வழிபடுவது அல்லது பிரார்த்தனை மேற்கொள்வது. இது, நன்றியுணர்வை (gratitude) வெளிப்படுத்துவதற்காகச் செய்யப்படும் பிரார்த்தனை.

இவ்விதமான பிரார்த்தனை, வெற்றியினால் நமக்கு எந்த விதமான கர்வமும் ஏற்படாமல் பாதுகாக்கிறது. நம்மிடமுள்ள அனைத்துவிதமான செல்வங்களும் இறைவனுக்கே உரியவை என்ற உண்மையை உணர்த்துவதற்கு இத்தகைய பிரார்த்தனை உதவுகிறது.

மூன்றாவது வகை: ஒவ்வொரு நாளும் இறைவழிபாடு செய்வதை வழக்கமாகக் கொண்டு பிரார்த்தனையை மேற்கொள்வது. பலர்

தினந்தோறும் காலையில் சிறிது நேரம் இறைவழிபாட்டில் ஈடுபட்ட பின்னர்தான் மற்ற செயல்களைச் செய்யத் தொடங்குவார்கள். இவ்விதம் வழக்கப்படுத்துவது மிக நல்ல தவமாகிறது.

இவ்வாறு, பிரார்த்தனை (prayer) நமக்குப் பலவிதங்களில் உறுதுணையாக அமைகிறது.

வேதங்களில் இறைவழிபாட்டுக்கான மந்திரங்கள் ஏராளமாக உள்ளன. இவற்றையே சாந்தி பாடங்கள் என்று அழைக்கிறோம்.

நமது மரபில் பிரம்ம சூத்திரம் போன்ற மேலான வேதாந்த பாடங்கள் பயில்வதற்கு முன் பத்து சாந்தி பாடங்கள் படிப்பது வழக்கம். நான்கு வேதங்களில் இருந்தும் சேகரிக்கப்பட்ட இந்தப் பத்து சாந்தி பாடங்களும், வேதங்களில் அமைந்துள்ள வேறுசில சாந்தி பாடங்களும் இந்தச் சிறிய நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. இங்கு உள்ள சாந்தி பாடங்களை தியானமாகவும் பாராயணமாகவும் சிந்தனைக்காகவும் நாம் எடுத்துக்கொண்டு பயிற்சி செய்து பயன் அடையலாம்.

அனைவரும் ஆன்மிக முன்னேற்றமடைய அன்பான ஆசிகளுடன்,

*ஸ்வாமி குருபரானந்த*



**ओं श्रीगुरुभ्यो नमः**

ஓம் ஶ்ரீகுருப்யோ நம:

**१. स ह नाववतु। स ह नौ भुनक्तु। सह वीर्यं करवावहै।**
**तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै।**
**ओं शान्तिः शान्तिः शान्तिः।।**

***1. ஸ ஹ நாவவது। ஸ ஹ நௌ புநக்து ।***
***ஸஹ வீர்யம் கரவாவஹை ।***
***தேஜஸ்விநாவதீதமஸ்து மா வித்விஷாவஹை ।***
***ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ।।***

குரு சிஷ்யர்களாகிய எங்கள் இருவரையும் அந்த இறைவன் காப்பாற்றட்டும். அந்த இறைவன் எங்கள் இருவரையும் காப்பாற்றட்டும். எங்களுக்குரிய முயற்சியை நாங்கள் இருவரும் சேர்ந்து செய்வோமாக. எங்கள் படிப்பு ஒளி பொருந்தியதாக இருக்கட்டும். நாங்கள் ஒருவரையொருவர் வெறுக்காமல் இருப்போமாக.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।।



२. शं नो मित्रः शं वरुणः। शं नो भवत्वर्यमा।
शं न इन्द्रो बृहस्पतिः शं नो विष्णुरुरुक्रमः।
नमो ब्रह्मणे। नमस्ते वायो। त्वमेवप्रत्यक्षं ब्रह्मासि।
त्वमेवप्रत्यक्षं ब्रह्म वदिष्यामि। ऋतं वदिष्यामि। सत्यं वदिष्यामि।
तन्मामवतु। तद्वक्तारमवतु। अवतु माम्। अवतु वक्तारम्।।
ओं शान्तिः शान्तिः शान्तिः।।

*௨. ஶம் நோ மித்ர: ஶம் வருண: । ஶம் நோ பவத்வர்யமா ।*
*ஶம் ந இந்த்ரோ ப்ருஹஸ்பதி: । ஶம் நோ விஷ்ணுருருக்ரம: ।*
*நமோ ப்ரஹ்மணே । நமஸ்தே வாயோ ।*
*த்வமேவப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி ।*
*த்வமேவப்ரத்யக்ஷம் ப்ரஹ்ம வதிஷ்யாமி ।*
*ரிதம் வதிஷ்யாமி । ஸத்யம் வதிஷ்யாமி ।*
*தந்மாமவது । தத்வக்தாரமவது ।*
*அவது மாம் । அவது வக்தாரம் ।*

*ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ।।*



மித்ரன் என்கின்ற தேவர் எங்களுக்கு மங்களத்தைக் கொடுப்பவராக இருக்கட்டும். வருணதேவர் எங்களுக்கு மங்களத்தைக் கொடுப்பவராக இருக்கட்டும். அர்யமா என்கின்ற தேவர் எங்களுக்கு மங்களத்தைக் கொடுப்பவராக இருக்கட்டும். இந்த்ரதேவரும் ப்ருஹஸ்பதியும் எங்களுக்கு மங்களத்தைக் கொடுப்பவர்களாக இருக்கட்டும். நீண்ட பாதங்களையுடைய விஷ்ணு எங்களுக்கு மங்களத்தைக் கொடுப்பவராக இருக்கட்டும். ஹிரண்யகர்ப தேவருக்கு நமஸ்காரம். ஹிரண்யகர்ப தேவரே, உங்களுக்கு நமஸ்காரம். நீங்களே நேரில் காணக்கூடிய ப்ரஹ்மனாக இருக்கிறீர்கள். நீங்களே நேரில் காணக்கூடிய ப்ரஹ்மன் என்று சொல்வேன். சரியான அறிவு ஸ்வரூபமாக உங்களைச் சொல்வேன். ஸத்ய ஸ்வரூபமாக உங்களைச் சொல்வேன். அந்த ஹிரண்யகர்ப தத்துவம் என்னைக் காப்பாற்றட்டும். அது குருவைக் காப்பாற்றட்டும். அது என்னைக் காப்பாற்றட்டும். அது குருவைக் காப்பாற்றட்டும்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥



३. यश्छन्दसामृषभो विश्वरूपः। छन्दोभ्योऽध्यमृतात् सम्बभूव।
स मेन्द्रो मेधया स्पृणोतु। अमृतस्य देव धारणो भूयासम्।
शरीरं मे विचर्षणम्। जिह्वा मे मधुमत्तमा। कर्णाभ्यां भूरि
विश्रुवम्। ब्रह्मणः कोशोऽसि मेधया पिहितः। श्रुतं मे गोपाय।।
ओं शान्तिः शान्तिः शान्तिः।।

3. யச்சந்தஸாம்ருஷபோ விச்வரூப: ।
சந்தோப்யோऽத்யம்ருதாத் ஸம்பபூவ ।
ஸ மேந்த்ரோ மேதயா ஸ்ப்ருணோது ।
அம்ருதஸ்ய தேவ தாரணோ பூயாஸம் ।
சரீரம் மே விசர்ஷணம் । ஜிஹ்வா மே மதுமத்தமா ।
கர்ணாப்யாம் பூரி விச்ருவம் । ப்ரஹ்மண: கோசோऽஸி
மேதயா பிஹித: । ச்ருதம் மே கோபாய ।

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।।



எந்த ஓங்காரமானது என்றுமுள்ள வேதங்களிலிருந்து தோன்றியதோ, வேத மந்த்ரங்களில் சிறந்ததோ, அனைத்துமாக விளங்குகிறதோ, அந்த ஓங்காரம், அறிவை நிலைப்படுத்துவதன் மூலம் என்னை வலிமைப்படுத்தட்டும். ஓங்கார ரூபமான இறைவா, ப்ரஹ்ம ஞானத்தை நான் அனுபவிப்பவன் ஆவேனாக. என்னுடைய உடல் நோயற்று இருக்கட்டும். என்னுடைய நாக்கு இனிமையாகப் பேசுவதாக இருக்கட்டும். செவிகளால் மீண்டும் மீண்டும் சாஸ்த்ரத்தை நான் கேட்பேனாக. நீ ப்ரஹ்மனின் இருப்பிடமாக விளங்குகிறாய். உலக விஷயங்களைப் பற்றிய அறிவால் நீ மறைக்கப்பட்டுள்ளாய். என்னால் சாஸ்த்ரத்தின் மூலம் கேட்கப்பட்டதைக் காப்பாற்றுவாயாக.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।।



४. अहं वृक्षस्य रेरिवा। कीर्तिः पृष्ठं गिरेरिव।
ऊर्ध्वपवित्रो वाजिनीव स्वमृतमस्मि।
द्रविणग्ँ सवर्चसम्। सुमेधा अमृतोऽक्षितः।
इति त्रिशङ्कोर्वेदानुवचनम्।।
ओं शान्तिः शान्तिः शान्तिः।।

*4. அஹம் வ்ருக்ஷஸ்ய ரேரிவா। கீர்தி: ப்ருஷ்டம் கிரேரிவ*
*ஊர்த்வபவித்ரோ வாஜினீவ ஸ்வம்ருதமஸ்மி ।*
*த்ரவிணம் ஸவர்சஸம்। ஸுமேதா அம்ருதோऽக்ஷித: ।*
*இதி த்ரிஶங்கோர் வேதானுவசனம் ॥*
*ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ॥*



ஆத்மஞானத்தை அடைந்ததற்குப் பிறகு கூறிய திரிசங்குவினுடைய வசனம் இது: நான் உலகமாகின்ற மரத்தைத் தாங்குபவனாக இருக்கிறேன். மலையின் உச்சியைப் போல் என்னுடைய புகழ் ஓங்கியிருக்கிறது. முழுவதும் தூய்மையடைந்தவனாக உள்ளேன். ஸூர்ய தேவனில் இருக்கின்ற ஒளியைப் போல அழியாத ஆத்ம தத்துவமாகவும் ஒளி பொருந்திய உண்மைப் பொருளாகவும் மங்கள ரூபமான அறிவை அடைந்தவனாகவும் மரணமற்றவனாகவும் மாற்றமற்றவனாகவும் இருக்கிறேன்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।।



५. वाङ् मे मनसि प्रतिष्ठिता। मनो मे वाचि प्रतिष्ठितम्।
आविरावीर्म एधि। वेदस्य म आणीस्थः।
श्रुतं मे मा प्रहासीः। अनेनाधीतेनाहोरात्रान् सन्दधामि।
ऋतं वदिष्यामि। सत्यं वदिष्यामि। तन्मामवतु।
तद्वक्तारमवतु। अवतु माम्। अवतु वक्तारमवतु वक्तारम्।
ओं शान्तिः शान्तिः शान्तिः।।

*5. வாங்மேமநஸி ப்ரதிஷ்டிதா । மநோ மே வாசி ப்ரதிஷ்டிதம்। ஆவிராவீர்ம ஏதி । வேதஸ்யம ஆணீஸ்த: । ச்ருதம் மே மா ப்ரஹாஸீ: । அநேநாதீ தேநாஹோராத்ராந் ஸந்ததாமி । ருதம் வதிஷ்யாமி । ஸத்யம் வதிஷ்யாமி । தந்மாமவது । தத்வக்தாரமவது । அவதுமாம் । அவது வக்தாரமவது வக்தாரம் ।*
*ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ।।*



எனது வாக்கு மனதில் நிலைபெறட்டும் (மனதின் விருப்பத்திற்கு வாக்கு உறுதுணையாக இருக்கட்டும்.) எனது மனம் வாக்கில் நிலைபெறட்டும். (வாக்கால் படித்தது மனதில் நிற்கட்டும்.) ஒளிர்கின்ற பரம்பொருளே நீர் எனக்கு விளங்குவீராக. (எனது மனம், வாக்கு ஆகிய நீங்கள் இருவரும்) வேதத்தின் சரியான பொருளை எனக்கு உணர்த்தும் திறனை உடையவர்களாக இருப்பீர்களாக. என்னால் கேட்கப்பட்டவைகள் என்னை விட்டு விலகாது இருக்கட்டும். இரவும் பகலும் இவ்வறிவுடன் பொருந்தி இருப்பேனாக. மெய்ப்பொருளைப் பற்றியே பேசுவேனாக. உண்மையே பேசுவேனாக. அந்த (இறைவன்) என்னைக் காக்கட்டும். அவர் குருவைக் காக்கட்டும், என்னைக் காக்கட்டும். குருவைக் காக்கட்டும், குருவைக் காக்கட்டும்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:॥



६. भद्रं कर्णेभिः शृणुयाम देवाः। भद्रं पश्येमाक्षभिर्यजत्राः।
स्थिरैरङ्गैस्तुष्टुवाँ्सस्तनूभिः। व्यशेम देवहितं यदायुः।
स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः। स्वस्ति नः पूषा विश्ववेदाः।
स्वस्ति नस्ताक्ष्यो अरिष्टनेमिः। स्वस्ति नो बृहस्पतिर्दधातु।
ओं शान्तिः शान्तिः शान्तिः।।

6. பத்ரம் கர்ணேபி: ச்ருணுயாம தேவா: ।
பத்ரம் பச்யேமாக்ஷபிர்யஜத்ரா: । ஸ்திரைரங்கைஸ்துஷ்டு
வாம்ஸஸ்தனூபி: । வ்யசேம தேவஹிதம் யதாயு:।
ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்தச்ரவா: । ஸ்வஸ்தி ந:
பூஷா விச்வவேதா: । ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ
அரிஷ்டனேமி: । ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ்பதிர்ததாது।
ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ।।



தேவர்களே, (நாங்கள்) செவிகளால் நல்லதைக் கேட்போமாக. வணக்கத்திற்குரிய தேவர்களே (நாங்கள்) கண்களால் நல்லதைப் பார்ப்போமாக. உறுதியான உறுப்புகளுடன் வேதங்களால் உங்களை நாங்கள் புகழ்ந்துகொண்டு, இறைவனால் எங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள ஆயுளை அனுபவிப்போமாக. ஓங்கிய புகழை உடைய இந்த்ரன் எங்களுக்கு நன்மையை அருளட்டும். அனைத்தையும் அறிகின்ற ஸூர்யதேவர் எங்களுக்கு நன்மையை அருளட்டும். தடையின்றிச் செல்லும் கருடதேவர் எங்களுக்கு நன்மையை அருளட்டும். பேரறிவுடைய ப்ருஹஸ்பதி எங்களுக்கு நன்மையை அருளட்டும்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥



७. आप्यायन्तु ममाङ्गानि वाक्प्राणश्चक्षुः श्रोत्रमथो बलमिन्द्रियाणि च सर्वाणि। सर्वं ब्रह्मौपनिषदम्। माहं ब्रह्म निराकुर्यां मा मा ब्रह्म निराकरोत्। अनिराकरणमस्त्वनिराकरणं मे अस्तु।
तदात्मनि निरते य उपनिषत्सु धर्मास्ते मयि सन्तु। ते मयि सन्तु।
ओं शान्तिः शान्तिः शान्तिः।।

7. ஆப்யாயந்து மமாங்காநி வாக்ப்ராணச்சக்ஷு:
ச்ரோத்ரமதோ பலமிந்த்ரியாணி ச ஸர்வாணி ।
ஸர்வம் ப்ரஹ்மௌபநிஷதம் । மாஹம் ப்ரஹ்ம
நிராகுர்யாம் । மா மா ப்ரஹ்ம நிராகரோத் ।
அநிராகரணமஸ்த்வநிராகரணம் மே அஸ்து ।
ததாத்மநி நிரதே ய உபநிஷத்ஸு
தர்மாஸ்தே மயி ஸந்து । தே மயி ஸந்து ।
ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ।।



எனது அங்கங்கள் ஆற்றல் பெறட்டும். வாக்கு, ப்ராணன், கண், செவி மற்றும் எல்லா இந்திரியங்களும், அவற்றின் சக்தியும் ஆற்றல் பெறட்டும். உபநிஷத்தினால் மட்டும் அடையப்படும் ப்ரஹ்மன் அனைத்துமாக இருக்கிறது. நான் ப்ரஹ்மனை மறுக்காமல் இருப்பேனாக. ப்ரஹ்மன் என்னை மறுக்காமல் இருப்பாராக. என்னால் ப்ரஹ்மன் மறுக்கப்படாமல் இருக்கட்டும். என்னை ப்ரஹ்மன் மறுக்காமல் இருக்கட்டும். அந்த ஆத்மாவை அறியும் மார்க்கத்தில் முழு ஈடுபாடுடைய என்னிடத்தில், உபநிஷத்துக்களில் கூறப்பட்டுள்ள தகுதிகள் என்னிடத்தில் இருக்கட்டும். அவை என்னிடத்தில் இருக்கட்டும்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥



८. पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते।
ओं शान्तिः शान्तिः शान्तिः।।

*8. பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே ।*
*பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவஶிஷ்யதே ।*
*ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ।।*

அந்த ஈச்வரன் பூர்ணஸ்வரூபமானவர். இந்த ஜீவன் பூர்ணஸ்வரூபமானவன். பூர்ணமான ஈச்வரனிடமிருந்து பூர்ணமான ஜீவன் தோன்றியுள்ளான். (பூர்ணமான ஈச்வரனிடம் இருந்து) பூர்ணமான ஜீவனுடைய ஸ்வரூபத்தை எடுத்த பின்னரும் பூர்ணம் மட்டுமே எஞ்சியுள்ளது.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।।



९. भद्रं नो अपिवातय मनः ।

ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

*௯. பத்ரம் நோ அபிவாதய மந: ।*

*ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ॥*

இறைவா எங்கள் மனதை மேலான நன்மையின் பொருட்டு மென்மையாக எடுத்துச் செல்வீராக.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥



१०. यो ब्रह्माणं विदधातिपूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै।
तँ्हदेवं आत्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये।
ओं शान्तिः शान्तिः शान्तिः।।

*10. யோ ப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்*
*யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை ।*
*தம்ஹதேவம் ஆத்மபுத்திப்ரகாசம்*
*முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே ।।*
*ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ।।*

முதன்முதலில் எவர் ப்ரஹ்ம தேவரை (ஹிரண்யகர்பரை) படைக்கிறாரோ, எவர் அவருக்கு வேதங்களை எல்லாம் உபதேசிக்கிறாரோ, ஆத்மஞானத்தை பிரகாசிக்கும்படி செய்யும் அந்த தேவனை மோக்ஷத்தை அடைய விரும்பும் நான் சரணடைகிறேன்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।।



**गणानां त्वा गणपतिँ हवामहे कविंकवीनामुपमश्रवस्तमम्।**

**ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत**

**आ नः शृण्वन्नूतिभिस्सीद सादनम्।।**

***கணாநாம் த்வா கணபதிம் ஹவாமஹே***
***கவிம்கவீநாமுபமஸ்ரவஸ்தமம் ।***
***ஜ்யேஷ்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பத***
***ஆ நः ஶ்ருந்வந்நூதிபிஸ்ஸீத ஸாதநம் ॥***

(ரிக்வேதம்:2.23.1)

தேவர் கூட்டத்துக்குத் தலைவர் ஆதலால் கணபதி என்ற பெயர் பெற்றவரே, உம்மைப் போற்றி அழைக்கிறோம். முதன்மையானவர்களுள் தலைசிறந்தவர், வேதங்களுக்கு நாயகராகிய தாங்கள் எங்கள் ப்ரார்த்தனைகளைக் கேட்டு எங்களைக் காப்பதற்காக விரைந்து வந்தருள்வீராக! மஹாகணபதியாகிய தங்களுக்கு எங்களது பணிவான வணக்கங்களை உரித்தாக்குகின்றோம்.



**महि ज्योतिर्बिभ्रतं त्वा विचक्षण भास्वन्तं चक्षुषे चक्षुषे मयः।**

**आरोहन्तं बृहतः पाजसस्परि वयं जीवाः प्रति पश्येम सूर्य।।**

*மஹி ஜ்யோதிர்பிப்ரதம் த்வா விசக்ஷண*
*பாஸ்வந்தம் சக்ஷுஷே சக்ஷுஷே மய: ।*
*ஆரோஹந்தம் ப்ருஹத: பாஜஸஸ்பரி வயம் ஜீவா:*
*ப்ரதி பஶ்யேம ஸூர்ய ।।*

(ரிக் வேதம் - ஸூர்ய ஸூக்தம் 10.37.8)

அனைத்தையும் பார்ப்பவனும், பெருநெருப்பாக இருப்பவனும், ஒளிமிக்கவனும், ஒவ்வொரு கண்ணுக்கும் மகிழ்ச்சியை அளிப்பவனும், பரந்த கடல் மீது உதிப்பவனுமாகிய ஸூர்ய தேவனே, நீண்ட ஆயுளுடையவர்களாக நாங்கள் உன்னை வாழ்நாள் முழுவதும் வழிபட அருள்வாயாக.



**यस्य ते विश्वा भुवनानि केतुना प्र चेरते नि च विशन्ति अक्तुभिः।**
**अनागास्त्वेन हरिकेश सूर्याह्नाह्ना नो वस्यसावस्यसोदिहि।।**

***யஸ்ய தே விஶ்வா புவநாநி கேதுநா***
***ப்ர சேரதே நி ச விஶந்தி அக்துபி: ।***
***அநாகாஸ்த்வேந ஹரிகேஶ***
***ஸூர்யோஹ்நாஹ்நா நோ***
***வஸ்யஸாவஸ்யஸோதிஹி ।।***

(ரிக் வேதம், ஸூர்ய ஸூக்தம் 10.37.9)

பொன்னிறமான ஒளிக்கற்றைகளை உடையவரே! பரந்த நீர்ப்பரப்பை உறிஞ்சுபவரே! சிறந்த உணர்வாகிய உமது அருளாலன்றோ உலகுயிர்கள் அனைத்தும் இயங்குகின்றன; ஓய்வெடுக்கின்றன. அத்தகைய சிறப்பு வாய்ந்த தாங்கள் எங்களுக்கு நாள்தோறும் குற்றமற்ற உயர்ந்த மேலான செல்வங்களை வழங்கி அருள்வீராக!



**हरिँ हरन्त–मनुयन्ति देवा विश्वस्येशानं वृषभं मतीनाम्।**

**ब्रह्म सरूप–मनुमेद–मागा–दयनं माविवधी–र्विक्रमस्व।।**

***ஹரிம் ஹரந்த-மநுயந்தி தேவா***
***விஶ்வஸ்யேஶாநம் வ்ருஷபம் மதீநாம் ।***
***ப்ரஹ்ம ஸரூப-மநுமேத-மாகா-***
***தயநம் மாவிவதீர்-விக்ரமஸ்வ ।।***

(மஹாநாராயண உபநிஷத் - ம்ருத்யுநிவாரண மந்த்ரம்-49)

அறிஞர் தலைவன், உலகின் நாயகன், துன்பங்களைக் களைபவனாகிய ஹரி எனப்படும் இறைவனைப் பொறிகளாகிய தேவர்கள் போற்றி வழிபடட்டும். அப்பரம்பொருள் என்னில் இணைந்து, என்னை விட்டு அகலாது இருக்கட்டும்!



**वातं प्राणं मनसाऽन्वारमाभहे प्रजापतिं यो भुवनस्य गोपाः।**

**स नो मृत्योस्त्रयतां पात्व ँ्हसो ज्योग्जीवा जरा-मशीमहि।।**

***வாதம் ப்ராணம் மநஸாऽந்வாரமாபஹே***
***ப்ரஜாபதிம் யோபுவநஸ்ய கோபா: ।***
***ஸ நோ ம்ருத்யோஸ்த்ராயதாம்***
***பாத்வம்ஹஸோ ஜ்யோக்ஜீவா ஜராமஶீமஹி ।।***

(மஹாநாராயண உபநிஷத் - ம்ருத்யு நிவாரண மந்த்ரம் - 47)

வானில் சுழலும் காற்றாகவும், உடலுள் இயங்கும் ப்ராணனாகிய காற்றாகவும், உலகைக் காப்பவராகவும் விளங்கும் உயிர்களின் தலைவனை, நான் முழுமனதுடன் த்யானம் செய்கிறேன். அவர் நம்மை மரண பயத்திலிருந்து காப்பாற்றட்டும். நாம் தவறுகள் புரியாவண்ணம் நம்மைப் பாதுகாக்கட்டும். நீண்டகாலம் அறவாழ்வு வாழ்ந்து முதுமை அடைவோமாக.



**नमो ब्रह्मणे धारणं मे अस्त्वनिराकरणं**

**धारयिता भूयासं कर्णयो:**

**श्रुतं मा च्योढ्वं ममामुष्य ओम्।।**

***நமோ ப்ரஹ்மணே தாரணம் மே அஸ்த்வநிராகரணம்***
***தாரயிதா பூயாஸம் கர்ணயோ:***
***ஶ்ருதம் மா ச்யோட்வம் மமாமுஷ்ய ஓம் ।।***

(மஹாநாராயண உபநிஷத் - 9)

உலக முதல்வனுக்கு வணக்கம். அவன் அருளால் எனது உள்ளத்தில் அறிவுநூலை மனனம் செய்யும் ஆற்றலும், அதன் பொருளை உணர்ந்து உள்ளத்தில் நிலைநிறுத்தும் ஆற்றலும் என்றும் பொருந்தியிருக்கட்டும். நற்கருத்துக்களை மறவாமல் உள்ளத்தில் தாங்கி இருப்பேனாக. இவ்வாறு ப்ரார்த்திக்கும் எனது காதுகளால் அவ்வப்போது பெரியோர்களிடமிருந்து கேட்ட நற்கருத்துக்கள் அழியாமல் உள்ளத்தில் நிலைத்து இருக்கட்டும்.



**सदसस्पतिमद्भुतं प्रियमिन्द्रस्य काम्यम्। सनिं मेधामयासिषम्।।**

***ஸதஸஸ்பதிமத்புதம் ப்ரியமிந்த்ரஸ்ய காம்யம் ।***

***ஸநிம் மேதாமயாஸிஷம் ।।***

(மஹாநாராயண உபநிஷத் 1-4.4)

விளையாட்டாக உலகைப் படைத்தருள்வதால் வியப்புக்குரியவரும், தேவேந்த்ரனுடைய பேரன்புக்குரியவரும், அன்பர்களால் நாடப்படுபவரும், வினைப்பயனை அருள்பவரும், மறைகளை மறவாமல் இருக்க அருள்பவரும் ஆகிய உலக நாயகனை நான் சார்ந்திருப்பேனாக.



**ब्रह्ममेतु माम्। मधुमेतु माम्।**

**ब्रह्ममेव मधुमेतु माम्।।**

***ப்ரஹ்மமேது மாம்। மதுமேது மாம் ।***
***ப்ரஹ்மமேவ மதுமேது மாம் ।।***

(மஹாநாராயண உபநிஷத் - த்ரிஸுபர்ண மந்த்ரம் - 38.1)

பரம்பொருள் என்னை வந்து சேரட்டும். பேரின்பம் என்னை வந்து அடையட்டும். பேரின்பமேயாகிய பரம்பொருள் என்னிடம் குடிகொள்ளட்டும்.



**ओं असतो मा सद्गमय।**

**तमसो मा ज्योतिर्गमय।**

**मृत्योर्माऽमृतं गमय।**

***ஓம் அஸதோ மா ஸத்கமய ।***

***தமஸோ மா ஜ்யோதிர்கமய ।***

***ம்ருத்யோர்மாऽம்ருதம் கமய ।***

(ப்ருஹதாரண்யக உபநிஷத் 1.3.28)

இறைவா! இயல்பாகவே தீய செயல்களில் நாட்டமுடைய என்னை நல்ல செயல்களில் நாட்டமுடையவனாக ஆக்கி அருள்வீராக. தீய செயல்களுக்குக் காரணமான அறியாமையில் இருந்து என்னை விடுவித்து நல்ல செயல்களைப் பற்றிய நல்லறிவை நான் அடையும்படி அருள்வீராக. தீய செயல்களால் அழித்துக்கொள்ளும் என்னை நற்செயல்களால் அழிவற்றவனாக்குவீராக.



**येन देवा न वियन्ति नो च विद्विषते मिथः।**

**तत् कृण्मो ब्रह्म वो गृहे संज्ञानं पुरुषेभ्यः।।**

***யேந தேவா ந வியந்தி நோ ச வித்விஷதே மித: ।***
***தத் க்ருண்மோ ப்ரஹ்ம வோ க்ருஹே ஸம்ஜ்ஞாநம் புருஷேப்ய: ।***

(அதர்வ வேதம், ஸம்மநஸ்ய ஸூக்தம் 3.30.4)

தேவர்கள் ஒருவருக்கொருவர் வெறுத்துக்கொள்ளாமலும், உறவுகளை முறித்துக் கொள்ளாமலும் (உணர்ச்சிகளுக்கு வசப்படாமல் அறிவுபூர்வமாக) வாழ்வதற்குக் காரணமாக அமைகிற மெய்யுணர்வு, உங்கள் (நமது) இல்லத்தில் உள்ள மனிதர்களிடையே விளங்க பரம்பொருளை ப்ரார்த்திப்போமாக.



**यत् प्रज्ञानमुत चेतो धृतिश्च यज्ज्योतिरन्तरमृतं प्रजासु।**

**यस्मान्न ऋते किञ्च न कर्म क्रियते तन्मे मनः शिवसङ्कल्पमस्तु।।**

***யத் ப்ரஜ்ஞாநமுத சேதோ த்ருதிஶ்ச***
***யஜ்ஜ்யோதிரந்தரம்ருதம் ப்ரஜாஸு ।***
***யஸ்மாந்ந ருதே கிஞ்ச ந கர்ம க்ரியதே***
***தந்மே மந: ஶிவஸங்கல்பமஸ்து ।।***

(ஶுக்ல யஜுர் வேதம், வாஜஸநேயி ஸம்ஹிதை 34.3)

எதன் அருளால் தன்னறிவும், நினைவாற்றலும், உள்ளத்தில் உறுதியும் தோன்றுகிறதோ, அனைத்து உயிர்களினுள்ளும் எது அழிவற்ற உணர்வொளியாக விளங்கிக் கொண்டுள்ளதோ, எதன் இருப்பில்லாமல் எச்செயலையும் செய்ய இயலாதோ, அதன் அருளால் என் உள்ளம் உயர்ந்த நல்லெண்ணங்கள் நிறைந்ததாக விளங்கட்டும்.



**पुरुषस्य विद्म सहस्राक्षस्य महादेवस्य धीमहि।**

**तन्नो रुद्रः प्रचोदयात्।।**

***புருஷஸ்ய வித்ம ஸஹஸ்ராக்ஷஸ்ய மஹாதேவஸ்ய தீமஹி ।***

***தந்நோ ருத்ர: ப்ரசோதயாத் ।।***

(தைத்திரீய ஆரண்யகம் 10-1-17)

எங்கும் நீக்கமற நிறைந்துள்ள, கணக்கற்ற கண்களையுடைய, பேரறிவுப் பரம்பொருளை அறிந்து, ஆழ்ந்து எண்ணி ஆழ்மனதில் பதிப்போமாக. அப்பரம்பொருளே இச்செயல்களில் நம்மை நன்கு ஈடுபடுத்தி அருள்புரியட்டும்.



**मेधामनीषे माऽऽविशता ँ्समीची**

**भूतस्य भव्यस्यावरुद्ध्यै**

**सर्वमायुरयाणि सर्वमायुरयाणि।।**

***மேதாமநீஷே மாऽऽவிஶதாம்ஸமீசீ***
***பூதஸ்ய பவ்யஸ்யாவருத்த்யை***
***ஸர்வமாயுரயாணி ஸர்வமாயுரயாணி ।।***

(தைத்திரீய ஆரண்யகம் 9.2)

கற்றதும் கற்கப்போவதும் என்னிடம் நிலைத்திருப்பதன் பொருட்டு உள்வாங்கிக்கொள்ளும் ஆற்றலும் (க்ரஹிக்கும் சக்தி) நினைவில் நிறுத்திக்கொள்ளும் ஆற்றலும் (தாரணா சக்தி) என்னுள் புகுந்து உறையட்டும். கற்பதற்காகவே முழுமையான வாழ்க்கைக் காலத்தைப் பெற்றுள்ளேன். கற்பதற்காகவே முழுமையான வாழ்க்கைக் காலத்தைப் பெற்றுள்ளேன்.



**प्रणो देवी सरस्वती वाजेभिर्वाजिनीवती।**

**धीनामवित्र्यवतु।।**

***ப்ரணோ தேவீ ஸரஸ்வதீ வாஜேபிர்வாஜிநீவதீ ।***

***தீநாமவித்ர்யவது ।।***

(ரிக்வேதம் - மண்டலம் 6 - அஷ்டகம் 4 - ஸூக்தம் 61 - ரிக் 4)

பணிவோரைப் பாதுகாக்கும் அறிவே உருவான ஸரஸ்வதி அன்னை நமக்கு அறிவாற்றலையும், சொல்லாற்றலையும் (இடைவிடாது) அருளிப் பாதுகாப்பாளாக.



**शिवा नः शन्तमा भवन्तु। दिव्या आप ओषधयः।**

**सुमृडीका सरस्वति। मा ते व्योम सन्दृशि।।**

***ஶிவா ந: ஶந்தமா பவந்து। திவ்யா ஆப ஓஷதய: ।***

***ஸும்ருடீகா ஸரஸ்வதி। மா தே வ்யோம ஸந்த்ருஶி ।।***

(தைத்திரீய ஆரண்யகம் 1-3-3)

தெய்விக ஆற்றல் மிக்க நீரும், மரம் செடிகொடிகளும் நமக்குத் தீமையைப் போக்கி உயர் நலத்தை அருளட்டும். அறிவுத் தாயே (ஸரஸ்வதி), பேரின்பத்தை அருள்வாயாக! உனக்கும் (எனக்கும்) இடைவெளியை நான் காணாமலிருக்க அருள்புரிவாயாக! (புத்தியில் தொடர்ச்சியாகத் தெளிந்த அறிவு ஓங்கி வளர வேண்டுகிறேன்.)



**आ नो भद्राः क्रतवो यन्तु विश्वतोऽदब्धासो उपरीतास उद्भिदः।**
**देवा नो यथा सदमिद् वृधे असन्नप्रायुवो रक्षितारो दिवे दिवे।।**

***ஆ நோ பத்ரா: க்ரதவோ யந்து***
***விஸ்வதோऽதப்தாஸோ உபரீதாஸ உத்பித: ।***
***தேவா நோ யதா ஸதமித் வ்ருதே***
***அஸந்நப்ராயுவோ ரக்ஷிதாரோ திவே திவே ।।***

(ரிக் வேதம் - ஆ நோ பத்ரா ஸூக்தம் 1.89.1)

அறியாமை, ஐயம், திரிபு ஆகியவற்றை நீக்கவல்ல நல்லெண்ணங்கள் நான்கு திசைகளிலிருந்தும் நம்மை நோக்கி வரட்டும். முறையான வாழ்வைப் பின்பற்றுபவர்களை விட்டு நீங்காத தேவர்கள், நம் அனைவருக்கும் இடைவிடாத இன்பத்தைப் பெருகச் செய்து, நம்மைப் பாதுகாப்பவர்களாக விளங்கட்டும்.



**तामग्निवर्णां तपसा ज्वलन्तीं वैरोचनीं कर्मफलेषु जुष्टाम्।**
**दुर्गां देवी ँ शरणमहं प्रपद्येसुतरसि तरसे नमः।।**

*தாமக்நிவர்ணாம் தபஸா ஜ்வலந்தீம்*
*வைரோசநீம் கர்மபலேஷு ஜுஷ்டாம் ।*
*துர்காம் தேவீம் ஶரணமஹம் ப்ரபத்யே*
*ஸுதரஸி தரஸே நம: ॥*

(தைத்திரீய ஆரண்யகம் 10.2.2)

செந்தீ வண்ணத்தவளும், தனது ஒளியால் (பகைவர்களை) எரிப்பவளும், மெய்யறிவுக் கண்ணால் காணப்பட்டவளும், வினைப்பயனைக் கூட்டி வைப்பவளுமான துர்காதேவியை நான் ஶரணடைகிறேன். பிறவிக்கடலை எளிதில் கடக்கச் செய்பவளே! (பிறவிக்கடலை எளிதல் கடக்கச் செய்யும் உன்னை முற்றிலும் சார்ந்து) வணங்குகிறேன்.



**अग्ने नय सुपथा राये अस्मान्**

**विश्वानि देव वयुनानि विद्वान्।**

**युयोध्यस्मज्जुहुराणमेनो**

**भूयिष्ठान्ते नम उक्तिं विधेम॥**

***அக்நே நய ஸுபதா ராயே அஸ்மாந்***
***விஶ்வாநி தேவ வயுநாநி வித்வாந் ।***
***யுயோத்யஸ்மஜ்ஜுஹுராணமேநோ***
***பூயிஷ்டாந்தே நம உக்திம் விதேம ॥***

(ஈசாவாஸ்யோபநிஷத் - 18 வது மந்த்ரம்)

அக்நியே! எங்களது நற்செயல்களின் விளைவாகிய செல்வங்களை நாங்கள் நன்கு நுகர எம்மை நல்வழியில் அழைத்துச் செல்வீராக! ஒளிவடிவானவரே! நாங்கள் கடைப்பிடித்த நற்செயல்களையும், வழிபாடுகளையும் நீர் அறிவீர்! பிறர் அறியாமல் நாங்கள் செய்த பாவத்தை எம்மிடமிருந்து விலக்கி அழிப்பீராக! பணிவான வணக்கங்களுடன் கூடிய சொற்களை உமக்குப் பலமுறை ஸமர்ப்பிக்கிறோம்.



**अपाश्न्युष्णिमपारक्षः अपाश्न्युष्णिमपारघम्।**

**अपाघ्रमपचावर्तिम्। अपदेवीरितो हित।**

*அபாச்ந்யுஷ்ணிமபாரக்ஷ:। அபாச்ந்யுஷ்ணிமபாரகம் ।*

*அபாக்ராமபசாவர்த்திம்। அபதேவீரிதோஹித ।*

(தைத்திரீயாரண்யகம் 1-3-1)

நீரில் உறையும் தெய்வங்களே! அநுபவிக்கப்படும் பொருள்களை எரிப்பதன் வாயிலாக அநுபவிப்பவர்களை எரிக்கும் நெருப்பு என்னை அணுகாமல் விலக்கி அருள்வீர்களாக! அவ்வாறே துன்பம் தரும் அரக்கர்களை அகற்றுவீர்களாக! உடலை வாட்டும் காய்ச்சலை விரட்டுவீர்களாக! துன்பத்திற்குக் காரணமான பாபங்களைப் போக்கியருள்வீர்களாக! பொறிகளின் புலனாற்றல் குறைவைப் போக்குவீர்களாக! பொருளின்மையையும் போக்கியருள்வீர்களாக! அனைத்து இடையூறுகளையும் அறவே அகற்றி அருள்புரிவீர்களாக!



**आपमापामपः सर्वाः। अस्मादस्मादितोमुतः।**

**अग्निर्वायुश्च सूर्यश्च। सहसञ्चस्करर्द्धिया।।**

***ஆபமாபாமப: ஸர்வா:। அஸ்மாதஸ்மாதிதோமுத: ।***

***அக்நிர்வாயுஶ்ச ஸூர்யஶ்ச। ஸஹஸஞ்சஸ்கரர்த்தியா ।।***

(தைத்திரீய ஆரண்யகம் 1-1-3)

மண்ணுலகிலும், விண்ணுலகிலும் உள்ள அனைத்து நீர்த் தெய்வங்களையும், அக்நி, வாயு, ஸூர்யன் ஆகிய தெய்வங்களையும் மேன்மையை விரும்பிப் போற்றி வழிபடுகிறேன். நீர் தூய்மையடையட்டும்; என் உள்ளமும் தூய்மையடையட்டும்.



**अन्नमयादन्नमयं अथवा चैतन्यमेव चैतन्यात्।**

**यतिवर दूरीकर्तुं वाञ्छसि किं ब्रूहि गच्छ गच्छेति।। ***

***அன்னமயாதன்னமயம் அதவா சைதன்யமேவ சைதன்யாத் ।***

***யதிவர தூரீகர்தும் வாஞ்சஸி கிம் ப்ரூஹி கச்ச கச்சேதி ॥***

துறவிகளில் சிறந்தவரே, போ போ என்று எதைக் கூறுகிறீர்கள்? உடலில் இருந்து உடல் விலகிச் செல்ல வேண்டுமா, அல்லது சைதன்யத்தில் இருந்து சைதன்யம் விலகிச் செல்ல வேண்டும் என்று விரும்புகிறீர்களா?



प्रत्यग्वस्तुनि निस्तरङ्गसहजानन्दावबोधाम्बुधौ
विप्रोऽयं श्वपचोऽयमित्यपि महान् कोऽयं विभेदभ्रमः।
किं गङ्गाम्बुनि बिम्बितेऽम्बरमणौ चाण्डालवीथीपयः
पूरे वाऽन्तरमस्ति काञ्चनघटीमृत्कुम्भयोर्वाऽम्बरे।। *

*ப்ரத்யக்வஸ்துனி நிஸ்தரங்கஸஹஜானந்தாவபோதாம்புதௌ*
*விப்ரோऽயம் ச்வபசோऽயமித்யபி மஹான் கோऽயம் விபதேப்ரம: ।*
*கிம் கங்காம்புனி பிம்பிதேऽம்பரமணௌ சாண்டாளவீதீபய:*
*பூரே வாऽந்தரமஸ்தி காஞ்சனகடீம்ருத்கும்பயோர்வாऽம்பரே ॥*

அலையில்லா நீங்காத ஆனந்தமான அறிவுக்கடலான தன் ஆன்மாவில் இவன் ப்ராஹ்மணன், இவன் புலையன் இது போன்ற பெரிய வேற்றுமை எனும் தவறு எங்கிருந்து தோன்றியது? கங்கை நீரிலும், சண்டாளன் வீட்டு அருகில் உள்ள சாக்கடை நீரிலும் பிரதிபலிக்கின்ற ஸூர்யனிடத்தில் வேற்றுமை இருக்கிறதா? பொன் பானையிலும் மண் பானையிலும் உள்ள ஆகாசத்தில் வேற்றுமை இருக்கிறதா?

*( * இந்த இரண்டு ச்லோகங்களும் புலையனுடைய கூற்று.)*



१. जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते
या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी।
सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञापि यस्यास्ति चेत्
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम।।

*1. ஜாக்ரத்ஸ்வப்ன ஸுஷுப்திஷு ஸ்புடதரா யா ஸம்விதுஜ்ஜ்ரும்பதே*
*யா ப்ரஹ்மாதிபிபீலிகாந்ததனுஷு ப்ரோதா ஜகத்ஸாக்ஷிணீ ।*
*ஸைவாஹம் ந ச த்ருச்யவஸ்த்விதி த்ருடப்ரஜ்ஞாபி யஸ்யாஸ்தி சேத்*
*சாண்டாளோऽஸ்து ஸ து த்விஜோऽஸ்து குருரித்யேஷா மனீஷா மம ॥*

விழிப்பு நிலையிலும், கனவு நிலையிலும், உறக்க நிலையிலும் எந்தத் தூய அறிவு தெளிவாக வெளிப்படுகிறதோ, மேலும் உலகத்திற்கு ஸாக்ஷியாக எது ப்ரஹ்மா முதல் எறும்பு வரையுள்ள உடல்களில் ஊடுருவியுள்ளதோ அந்த அறிவே நான். பார்க்கப்படும் பொருள் நான் அல்ல என்ற இவ்விதமான உறுதியான ஞானம் யாருக்கு இருக்கிறதோ, அவர் சண்டாளனாக இருப்பினும் ப்ராஹ்மணனாக இருப்பினும், அவரே எனது குருநாதர் என்பது எனது உறுதியான ஞானம்.



२. ब्रह्मैवाहमिदं जगच्च सकलं चिन्मात्रविस्तारितं
सर्वं चैतदविद्यया त्रिगुणया सेशं मया कल्पितम्।
इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम।।

*௨. ப்ரஹ்மைவாஹமிதம் ஜகச்ச ஸகலம் சின்மாத்ரவிஸ்தாரிதம்*
*ஸர்வம் சைததவித்யயா த்ரிகுணயா ஸேசம் மயா கல்பிதம் ।*
*இத்தம் யஸ்ய த்ருடா மதி: ஸுகதரே நித்யே பரே நிர்மலே*
*சாண்டாளோऽஸ்து ஸ து த்விஜோऽஸ்து குருரித்யேஷா மனீஷா மம ॥*

நான் ப்ரஹ்மனாகவே இருக்கிறேன். இந்த முழுஉலகமும் சைதன்யத்திடமிருந்தே வெளிப்பட்டது. இறைவன் உட்பட இவை அனைத்தும் முக்குணமான அறியாமையின் துணைகொண்டு என்னால் கற்பிக்கப்பட்டுள்ளது. இவ்விதம் என்றுமுள்ள மேலான தூய்மையான ஆனந்த சொரூபமான ப்ரஹ்மனிடத்தில் உறுதியான ஞானம் யாருக்கு இருக்கிறதோ, அவர் சண்டாளனாக இருப்பினும், ப்ராஹ்மணனாக இருப்பினும் அவரே எனது குருநாதர் என்பது எனது உறுதியான ஞானம்.



३. शश्वन्नश्वरमेव विश्वमखिलं निश्चित्य वाचा गुरोः
नित्यं ब्रह्म निरन्तरं विमृशतां निर्व्याजशान्तात्मनाम्।
भूतं भावि च दुष्कृतं प्रदहतां संविन्मये पावके
प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम।।

*3. சச்வந்நச்வரமேவ விச்வமகிலம் நிச்சித்ய வாசா குரோ:*
*நித்யம் ப்ரஹ்ம நிரந்தரம் விம்ருசதாம் நிர்வயாஜ*
*சாந்தாத்மனாம் ।*
*பூதம் பாவி ச துஷ்க்ருதம் ப்ரதஹதாம் ஸம்விந்மயே பாவகே*
*ப்ராப்தாய ஸமர்பிதம் ஸ்வவபுரித்யேஷா மனீஷா மம ।।*

குருவின் உபதேசத்தால், அகில உலகமும் என்றும் அழியக்கூடியதே என்று உறுதி பூண்டு, மனத்தூய்மையும் மன அமைதியும் உடையவர்களாக, அழியாத ப்ரஹ்மனை என்றும் த்யானித்து கடந்த கால, வருங்கால வினைப்பயன்களும் பாபச்செயல்களும் அறிவு சொரூபமான நெருப்பில் எரிக்கின்றவர்களுடைய தன் உடல் ப்ராரப்த கர்மத்திடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது என்பது எனது உறுதியான ஞானம்.



४. या तिर्यङ्नरदेवताभिरहमित्यन्तः स्फुटा गृह्यते

यद्भासा हृदयाक्षदेहविषया भान्ति स्वतोऽचेतनाः।

तां भास्यैः पिहितार्कमण्डलनिभां स्फूर्तिं सदा भावयन्

योगी निर्वृतमानसः स गुरुरित्येषा मनीषा मम।।

*4. யா திர்யங்நரதேவதாபிரஹமித்யந்த: ஸ்புடா க்ருஹ்யதே*
*யத்பாஸா ஹ்ருதயாக்ஷதேஹவிஷயா பாந்தி*
*ஸ்வதோऽசேதனா: ।*
*தாம் பாஸ்யை: பிஹிதார்கமண்டலநிபாம் ஸ்பூர்திம் ஸதா*
*பாவயன்*
*யோகீ நிர்வ்ருதமானஸ: ஸ குருரித்யேஷா மனீஷா மம ।।*

எந்த அறிவு சொரூபம், மிருகம் மனிதன் தேவர்கள் ஆகியவர்களால் நான் என்று தன்னுள் தெளிவாக உணரப்பட்டுள்ளதோ, எதன் ப்ரகாசத்தினால் ஜடமான தன்மை கொண்ட மனம், புலன்கள், உடல், பொருள்கள் போன்றவை விளங்குகின்றனவோ, தன்னால் விளக்கப்படுகின்ற மேகங்களால் மறைக்கப்படும் ஸூர்யனுடன் ஒப்பிடப்படும் அந்த அறிவு சொரூபத்தை எப்பொழுதும் த்யானிக்கின்ற, த்ருப்தியான மனதையுடைய யோகியானவர் எவரோ, அவரே எனது குருநாதர் என்பது எனது உறுதியான ஞானம்.



५. यत्सौख्याम्बुधिलेशलेशत इमे शक्रादयो निर्वृताः
यच्चित्ते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः।
यस्मिन्नित्यसुखाम्बुधौ गलितधीर्ब्रह्मैव न ब्रह्मवित्
यः कश्चित् स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम।।

*5. யத்ஸௌக்யாம்புதிலேசலேசத இமே சக்ராதயோ நிர்வ்ருதா:*
*யச்சித்தே நிதராம் ப்ரசாந்தகலனே லப்த்வா முனிர்நிர்வ்ருத: ।*
*யஸ்மின்நித்யஸுகாம்புதௌ களிததீர்ப்ரஹ்மைவ ந ப்ரஹ்மவித்*
*ய: கச்சித் ஸ ஸுரேந்த்ரவந்திதபதோ நூனம் மனீஷா மம ॥*

எந்தப் பேரானந்தக் கடலின் சிறு துளியினால் இந்த இந்த்ரன் முதலியோர் த்ருப்தி அடைகிறார்களோ, முழுமையாக மாசு நீங்கிய மனதில் எதை அடைந்து முனிவர் மகிழ்ந்துள்ளாரோ, அந்த அழிவற்ற பேரானந்தக் கடலில் கரைந்த மனதையுடையவர் ப்ரஹ்மனை அறிந்தவராக மட்டும் அல்ல, ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே இருக்கிறார். அவர் யாராக இருந்தாலும் இந்த்ரனால் வணங்கத்தக்க பாதங்களை உடையவர் என்பது எனது உறுதியான ஞானம்.



ஓம்

ஸ்ரீகுருப்யோ நம:

# एकश्लोकी

## ஏகச்லோகீ

**किं ज्योतिस्तव भानुमानहनि मे रात्रौ प्रदीपादिकं**

**स्यादेवं रविदीपदर्शनविधौ किं ज्योतिराख्याहि मे।**

**चक्षुस्तस्य निमीलनादिसमये किं धीर्धियो दर्शने**

**किं तत्राहमतो भवान् परमकं ज्योतिस्तदस्मि प्रभो।।**

*கிம் ஜ்யோதிஸ்தவ பானுமானஹனி மே ராத்ரௌ ப்ரதீபாதிகம்*

*ஸ்யாதேவம் ரவிதீபதர்சனவிதௌ கிம் ஜ்யோதிராக்யாஹிமே ।*

*சக்ஷுஸ்தஸ்ய நிமீலனாதிஸமயே கிம் தீர்தியோதர்சனே*

*கிம் தத்ராஹமதோ பவான் பரமகம் ஜ்யோதிஸ்ததஸ்மி ப்ரபோ ।।*



| | | |
|---|---|---|
| குரு | : | உனக்கு ஒளி எது? |
| சிஷ்யன் | : | பகலில் எனக்கு ஸூர்யன். |
| குரு | : | இரவில்? |
| சிஷ்யன் | : | தீபம் முதலியவை. |
| குரு | : | இவ்விதம் இருக்கட்டும். ஸூர்யனையும் தீபத்தையும் பார்க்கும் விஷயத்தில் ஒளி எது என்று என்னிடம் கூறு. |
| சிஷ்யன் | : | கண். |
| குரு | : | கண்ணை மூடுதல் போன்ற நேரத்தில் எது ஒளி? |
| சிஷ்யன் | : | புத்தி. |
| குரு | : | புத்தியை அறியும் விஷயத்தில் எது ஒளி? |
| சிஷ்யன் | : | நான். |
| குரு | : | ஆகவே, நீ மேலான ஞான ஸ்வரூபம். |
| சிஷ்யன் | : | குருநாதரே, நான் அதுவாக இருக்கிறேன். |

ஓம்
ஸ்ரீகுருப்யோ நம:



# ।।श्री दक्षिणामूर्ति स्तोत्रम्।।

# ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்



१. विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया।
यःसाक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।

*1. விச்வம் தர்ப்பணத்ருச்யமான நகரீதுல்யம் நிஜாந்தர்கதம்*
*பச்யன்னாத்மநி மாயயா பஹிரிவோத்பூதம்யதா நித்ரயா ।*
*ய: ஸாக்ஷாத்குருதே ப்ரபோதஸமயே ஸ்வாத்மானமே*
*வாத்வயம்*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே ॥*

கண்ணாடியில் தோன்றுகின்ற நகரத்திற்கு நிகராக, தன் உள்ளே உள்ள உலகத்தை எவ்விதம் உறக்கத்தில் (உள்ளே உள்ள உலகம் வெளியில் தோன்றுவதுபோல காணப்படுகிறதோ அவ்விதம்) யார் தன்னிடத்தில் மாயையால் வெளியே உண்டானது போல் பார்த்துக் கொண்டு ஞானம் வந்தபின் இரண்டற்ற தன் ஆத்மசொரூபத்தை மட்டும் அறிகிறாரோ அந்த குருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (ஸமர்ப்பிக்கப்படுகிறது).



२. बीजस्यान्तरिवांकुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुनः
मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतम्।
मायावीव विजृम्भयत्यपि महायोगीव यः स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।

*௨. பீஜஸ்யாந்தரிவாங்குரோ ஜகதிதம் ப்ராங்நிர்விகல்பம் புன:*
*மாயாகல்பிததேசகாலகலனா வைசித்ர்யசித்ரீ க்ருதம் ।*
*மாயாவீவ விஜ்ரும்பயத்யபி மஹாயோகீவ ய: ஸ்வேச்சயா*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நமஇதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே ॥*

விதையில் உள்ள முளைபோல இந்த உலகம் படைப்புக்கு முன் வேற்றுமையற்றதாக இருந்து, பின் மாயையால் கல்பிக்கப்பட்ட இடம், காலம் முதலியவற்றின் சேர்க்கையால் ஏற்பட்ட வேற்றுமையால் பல வகைப்பட்டதாக செய்யப்பட்டது. (இப்படியான உலகை) யார் மாயாவியைப் போலவும் பெரிய யோகியைப் போலவும் தன் ஸங்கல்பத்தினால் தோற்றத்துக்குக் கோண்டுவந்தாரோ, அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (ஸமர்ப்பிக்கப்படுகிறது).



३. यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थकं भासते
साक्षात्तत्त्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान्।
यत्साक्षात्करणाद्भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।

*3. யஸ்யைவ ஸ்புரணம் ஸதாத்மகமஸத்கல்பார்த்தகம் பாஸதே*
*ஸாக்ஷாத்தத்வமஸீதி வேதவசஸா யோ போதயத்யாச்ரி*
*தான் ।*
*யத்ஸாக்ஷாத்கரணாத் பவேன்னபுன ராவ்ருத்திர்பவாம்*
*போநிதௌ*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ॥*

எந்த ஆத்மாவின் ப்ரகாசம் இல்லாத பொருளுக்கு நிகரான உலகத்தில் ஸத்ரூபமாக (ஸத் ஸத் என்று) விளங்குகிறதோ, எவர் தன்னை அண்டியவர்களுக்கு 'தத்வமஸி' (நீ அதுவாக இருக்கிறாய்) என்ற வேதவாக்யத்தை நேரடியாக உபதேசிக்கிறாரோ, எந்தத் தத்வத்தை அறிவதால் துயரக் கடலில் இருந்து மீண்டும் திரும்புதல் இல்லையோ, அந்த குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (ஸமர்ப்பிக்கப்படுகிறது).



४. नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरं
ज्ञानं यस्य तु चक्षुरादिकरणद्वारा बहिःस्पन्दते।
जानामीति तमेव भान्तमनुभात्येतत्समस्तं जगत्
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।

*4. நாநாச்சித்ரகடோதரஸ்திதமஹா தீபப்ரபாபாஸ்வரம்*
*ஞானம் யஸ்யது சக்ஷுராதிகரணத்வாரா பஹி:ஸ்பந்ததே ।*
*ஜானாமீதி தமேவ பாந்தமனுபாத்யேதத் ஸமஸ்தம் ஜகத்*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே ।।*

பல த்வாரங்களை கொண்ட பானைக்குள் வைக்கப்பட்ட பெரிய தீபத்தின் ஒளிபோன்று எந்த ஆத்மாவினுடைய ஞானமானது கண் முதலிய புலன்களின் வழியாக வெளியே செல்கிறதோ ‘தான’ாக விளங்குகின்ற அந்த (ஆத்ம தத்துவத்தை) தொடர்ந்து இந்த முழு உலகமும் நான் அறிகிறேன் என்று அறிகிறதோ, அந்த குருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (ஸமர்ப்பிக்கப்படுகிறது ).



५. देहं प्राणमपीन्द्रियाण्यपि चलां बुद्धिं च शून्यं विदुः
स्त्रीबालान्धजडोपमास्त्वहमिति भ्रान्ता भृशं वादिनः।
मायाशक्तिविलासकल्पितमहाव्यामोहसंहारिणे
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।

***5. தேஹம் ப்ராணமபீந்த்ரியாண்யபி சலாம் புத்திம்ச சூன்யம் விது:***
***ஸ்த்ரீ பாலாந்த ஜடோபமாஸ்த்வஹமிதி ப்ராந்தா ப்ருசம் வாதின: ।***
***மாயாசக்தி விலாஸகல்பிதமஹாவ்யாமோஹ ஸம் ஹாரிணே***
***தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ।।***

பெண்கள், குழந்தைகள், குருடர்கள், மூடர்கள் இவர்களுக்கு நிகரான மிகவும் குழப்பம் அடைந்த வாதம் புரிபவர்கள், உடலையும் ப்ராணனையும் இந்திரியங்களையும், சலனமான புத்தியையும், சூன்யத்தையும் நான் என்று (ஆத்மா என்று) அறிந்து கொண்டிருக்கிறார்கள். மாயாசக்தியால் தோற்றுவிக்கப்பட்ட இந்த பெரிய மயக்கத்தை அடியோடு அழிக்கின்ற அந்த குருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (ஸமர்ப்பிக்கப்படுகிறது)



६. राहुग्रस्तदिवाकरेन्दुसदृशो मायासमाच्छातनात्
सन्मात्रः करणोपसंहरणतो योऽभूत्सुषुप्तः पुमान्।
प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।

*6. ராஹுக்ரஸ்த திவாகரேந்துஸத்ருசோ மாயாஸமாச் சாதனாத்*
*ஸன்மாத்ர: கரணோபஸம்ஹரணதோ யோऽபூத்ஸுஷுப்த: புமான் ।*
*ப்ராகஸ்வாப்ஸமிதி ப்ரபோதஸமயே ய:ப்ரத்யபி ஞாயதே*
*தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ।।*

மாயையால் மறைக்கப்பட்டதனால் எந்தப் புருஷனானவர், ராஹுவால் மறைக்கப்பட்ட சூரிய சந்திரனைப் போன்றவராகவும், கரணங்கள் அடங்கியதால் உறக்க நிலையில் ஸத்ஸ்வரூபமாக மட்டும் இருக்கிறாரோ எவர் விழிப்பு நிலையில் முன் நான் சுகமாகத் தூங்கினேன் என்று ஞாபகப்படுத்திக் கொண்டு இருந்து வருகிறாரோ, அந்த குருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய ) இந்த நமஸ்காரம் ஸமர்ப்பிக்கப்படுகிறது ).



७. बाल्यादिष्वपि जाग्रदादिषु तथा सर्वास्ववस्थास्वपि
व्यावृत्तास्वनुवर्तमानमहमित्यन्तः स्फुरन्तं सदा।
स्वात्मानं प्रकटीकरोति भजतां यो मुद्रया भद्रया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।

*7. பால்யாதிஷ்வபி ஜாக்ரதாதிஷுததா*
*ஸர்வாஸ்வவஸ்தாஸ்வபி*
*வ்யாவ்ருத்தாஸ்வனுவர்த்தமான மஹமித்யந்த:*
*ஸ்புரந்தம் ஸதா ।*
*ஸ்வாத்மானம் ப்ரகடீகரோதி பஜதாம்யோ முத்ரயா பத்ரயா*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நமஇதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ॥*

மாறிமாறி வருகின்ற இளமைப்பருவம் முதலியவற்றிலும் அவ்விதமே விழிப்பு முதலிய எல்லா அவஸ்தைகளிலும் தொடர்ந்து வருகின்றதும், உள்ளே எப்பொழுதும் நான் என்று விளங்கி வருகின்றதான தனது ஆத்ம தத்வத்தை சிஷ்யர்களுக்கு எவர் மங்களமான சின்முத்திரையினால் வெளிப்படுத்திக் காட்டினாரோ அந்த குருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (ஸமர்ப்பிக்கப்படுகிறது ).



**८. विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसंबन्धतः**
**शिष्याचार्यतया तथैव पितृपुत्राद्यात्मना भेदतः।**
**स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामितः**
**तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।**

***௮. விச்வம் பச்யதி கார்யகாரணதயா ஸ்வஸ்வாமி ஸம் பந்தத:***
***சிஷ்யாசார்யதயா ததைவ பித்ருபுத்ராத்யாத்மனா பேதத: ।***
***ஸ்வப்னே ஜாக்ரதி வாயஏஷபுருஷோ மாயாபரிப்ராமித:***
***தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ॥***

எந்த இந்தப் புருஷனானவர் மாயாவால் மோகத்தை அடைந்தவராக கனவுநிலையிலும் விழிப்பு நிலையிலும் கார்ய காரண ஸம்பந்தம் உடையதாகவும், உடைமை-யஜமானன் என்ற ஸம்பந்தம் உடையதாகவும், சிஷ்யன்-ஆசார்யன் என்ற ஸம்பந்தத்தை உடையதாகவும் அவ்விதமே தந்தை-மகன் முதலிய ரூபமாகவும் உலகத்தை வேற்றுமையுடன் பார்க்கிறாரோ, அந்த குருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (ஸமர்ப்பிக்கப்படுகிறது).



९. भूरंभांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांसुःपुमान्
इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम्।
नान्यत्किञ्चन विद्यते विमृशतां यस्मात्परस्मादि्वभोः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये।।

*௯. பூரம்பாம்ஸ்யநலோऽநிலோऽம்பரமஹர்நாதோ ஹிமாம்ஸு: புமான்*
*இத்யாபாதி சராசராத்மகமிதம் யஸ்யைவ மூர்த் யஷ்டகம் ।*
*நாந்யத் கிஞ்சன வித்யதே விம்ருசதாம் யஸ்மாத் பரஸ்மாத் விபோ:*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே ।।*

அசைகின்ற-அசையாத தன்மையுடைய இந்த உலகம் பூமி, நீர், நெருப்பு, காற்று, ஆகாசம், சூர்யன், சந்திரன், யஜமானன் என்று எந்த இறைவனுக்கு இவை எட்டும் உடலாக விளங்குகின்றனவோ, உண்மையில் ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு எந்த வியாபகமான பரம்பொருளைக் காட்டிலும் வேறு ஒன்றும் இல்லையோ, அந்த குருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு (என்னுடைய) இந்த நமஸ்காரம் (ஸமர்ப்பிக்கப்படுகிறது ).



१०. सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिंस्तवे
तेनास्य श्रवणात्तदर्थमननाद्ध्यानाच्च संकीर्तनात्।
सर्वात्मत्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वतः
सिद्ध्येत्तत्पुनरष्टधा परिणतं चैश्वर्यमव्याहतम्।।

*10. ஸர்வாத்மத்வமிதி ஸ்புடீக்ருதமிதம் யஸ்மா தமுஷ்மிந்ஸ் தவே*
*தேனாஸ்ய ச்ரவணாத்ததர்த்தமனனாத் த்யானாச்ச ஸங்கீர்த்தனாத் ।*
*ஸர்வாத்மத்வமஹாவிபூதி ஸஹிதம் ஸ்யாதீச்வரத்வம் ஸ்வத:*
*ஸித்யேத் தத்புனரஷ்டதா பரிணதம் சைச்வர்யமவ்யாஹதம் ॥*

இவ்விதம் இந்த ஸ்தோத்ரத்தில் யாதொரு காரணத்தால் இந்த எல்லாமாக இருக்கும் தன்மை (ஸர்வாத்மத்வம்) நன்கு விளக்கப்பட்டதோ, அதனால் இதைக் கேட்பதனாலும், இதில் உள்ள பொருளைச் சிந்திப்பதாலும், த்யானிப்பதாலும், திரும்பத் திரும்பக் கூறுவதாலும் எல்லாமாக இருத்தல் என்ற உயர்ந்த மேன்மையுடன் கூடிய ஈச்வரத்தன்மை ஏற்படும். மேலும், எட்டுவிதமான அந்த அணிமா முதலிய ஐச்வர்யமும் தடையில்லாமல் தானாகவே கிட்டும்.